13th November 1961]

போட்ட கேள்வி சரியா, தவறு என்பது வேறு விஷயம். ஆனால் யூனிவர்சிடியைப் பற்றிக் கேள்வி கேட்டதும், ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள் வரிந்து கட்டிக்கொண்டு வருவதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. அது ஒருபுறம் இருக்கட்டும். நண்பர் தியாகராஜன் அவர்கள் அவர்களுக்குள்ள அதிகாரம் என்ன என்பதைத் தெரிந்து கொள்வதற்காக ஒரு கேள்வி போட்டார். அவர் போட்ட முறை வேண்டுமென்றால், கொஞ்சம் கடுமையாக இருந்தது என்று சொல்லலாம். யூனிவர்சிடியைப் பற்றிக் கேள்வி தாராளமாகக் கேட்கலாம். மதுரையிலே புதிதாக சர்வகலாசாலை ஒன்று வேண்டாமென்று சொல்கிறார்கள். கோயம்புத்தூரிலே ஒரு சிறிய அளவிலே டெக்னிகல் யூனிவர்சிடி ஆரம்பிக்கலாம் என்று சொல்லி இருக்கிறார்கள். இது அதிகாரத்தைப் பற்றியதே ஒன்றுமில்லை. எந்த முறையில் நம்முடைய படிப்பின் தரத்தை உயர்த்துவது என்பதேயாகும். ஒருசிலர் சர்வகலாசாலை ஒன்று வேண்டுமென்று சொல்கிறார்கள். அப்போதுதான் கல்வியின் வளர்ச்சிக்கு வசதியாக இருக்குமென்று அவர்கள் கருதுகிறார்கள். மற்றும் சிலர், புதிதாக மற்றொரு சர்வகலாசாலை வேண்டாம், அப்படி ஆரம்பித்தால், கல்வியின் தரத்தை ஒரேயளவில் காப்பாற்ற முடியாது என்று கருத்து தெரிவிக்கிறார்கள். இதை யோசித்துத்தான் முடிவெடுக்க வேண்டிய நிலைமையில் நாம் இருக்கிறோம். எல்லோரும் ஒரே மனப்பான்மையில் முடிவெடுப்போமானால், இன்னும் சௌகரியமாக இருக்கும்.

*Eviction of Cultivating Tenants*

* 2034 Q.—Sri **V. K. KOTHANDARAMAN** : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பூமிதான இயக்கத் தலைவர் வினோபா அவர்களிடமிருந்து முதல் மந்திரி அவர்களுக்கு சாகுபடியாளர்களை நிலத்திலிருந்து வெளியேற்றக் கூடாதென்பதைப் பற்றிய லெட்டர் வந்ததா ?

(இ) அதன் முழு விவரமென்ன ?

(உ) என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No, Sir.
(இ) & (உ) Do not arise.

*Regional Development*

* 2035 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the Government have stressed at the meeting of the National Development Council held during May 1961 the need for evolving a scheme for achieving balanced regional growth; and

(b) if so, the details thereof?

[13th November 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) The Government are alive to the need for the balanced regional growth. The matter was raised at the National Development Council meetings and subsequently with the Planning Commission at the time of the formulation of the Third Plan. The National Development Council at its meeting held on 31st May and 1st June 1961, considered this aspect. It was emphasised at the meeting that the benefits of industrialisation have to be spread evenly.

SRI N. K. PALANISAMI : ஸார், இந்த மாதிரி பிரைவேட் செக்டார் தொழில்கள் ஏற்படுத்துவதானது, ஒரு பக்கம் ரா-மெடீரியல் கிடைக்காதது ஒரு குறையாக இருந்தபோதிலும், எந்த இடத்திலே சீப்பாக லேபர் கிடைக்கிறதோ, அந்த இடத்திலே தான் தொழில்கள் ஏற்படுத்தப்படுகின்றன. ஆகவே, அவர்களை எல்லா இடங்களிலும் தொழிற்சாலைகளை ஏற்படுத்த வேண்டுமென்று சொல்வதற்கு சர்க்காரில் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கத்தினர் சொல்வது எவ்வளவு தூரம் சரியென எனக்குத் தெரியவில்லை. லேபர் சீப்பாக கிடைக்கிறது என்ற காரணத்தினால் மட்டும் ஒரு இடத்திலே தொழிலை ஆரம்பிக்க முடியாது. திறமையுள்ள தொழிலாளர்கள் எங்கே கிடைப்பார்களோ அந்த இடங்களிலே தான் தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டு வருவதை நாம் பார்க்கின்றோம். இன்றைக்கு சென்னையில் ஓரளவுக்கு அதிகமாக தொழில்கள் வருகிறது என்று சொன்னால், இங்கே தொழிலாளர்களுக்கு கூலி குறைவாக இருக்கிறது. தொழிலாளர்களுடைய திறமை எங்கே அதிகமாக கிடைக்கிறதோ, அங்கே தான் பல தொழில்கள் ஆரம்பிக்கப்படுகிறது. மற்ற வசதிகள் அடுத்தபடியாகத் தான் பார்க்கப்படுகின்றது. அந்தக் காரணத்தினாலே தான் பல தொழில்கள் இன்றைக்கு சென்னைக்கு வரக்கூடிய நிலைமை ஏற்பட்டு இருக்கிறது. தவிர, இப்போது எந்தத் தொழில்களுக்கும் திட்டம்போட்டு, அந்த அடிப்படையிலே ஆரம்பிக்கப்படுகின்ற காரணத்தினாலே, தொழில்கள் பரவலாக இல்லாத இடங்களிலே ஆரம்பிப்பதற்கும், அந்த முறையிலே என்னென்ன செய்ய வேண்டுமோ, அதைச் செய்வதற்கும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, வட்டார தொழில் வளர்ச்சியிலே சமநிலை ஏற்படுத்தும் கொள்கையை சமீபத்திலே ஏற்றுக்கொண்ட மத்திய அரசு, ஏற்கனவே இருக்கக்கூடிய தாழ்வு, உயர்வுகளைச் சமப்படுத்துவதற்கு, ஈடுசெய்யக்கூடிய முறையிலே என்னென்னத் திட்டங்களை ஏற்றுக்கொண்டு இருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது, உதாரணமாக சமீபத்திலே வந்திருக்கக்கூடிய தொழில்களை ஏற்படுத்தும்போது எந்தெந்த பகுதிகளிலே இப்போது கனரகத் தொழில்கள் ஏற்பட

13th November 1961]

வில்லையோ, அங்கெல்லாம் முக்கியத்துவம் கொடுப்பதற்கு முன் வந்திருக்கிறது. அதுமாதிரி இன்றைக்கு பார்த்து கொடுத்துக் கொண்டும் வருகிறார்கள்.

SR. P. U. SHANMUGAM : எந்தெந்தப் பகுதிகளில் சமநிலைத் தொழில் வளரவில்லை என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிடுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதை கணக்குப் போட்டு பார்த்ததில், வங்காளம், பம்பாய் ஆகிய இரண்டு ராஜ்யங்களைத் தவிர, மற்ற ராஜ்யங்கள் தொழில் வளர்ச்சியில் குறைந்திருக்கிறது. அதற்கு அடுத்தபடியாக, பாக்கி இருக்கக் கூடிய ராஜ்யங்களை எடுத்துக் கொண்டால், மத்திய பிரதேசம், உத்தர பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய ராஜ்யங்கள் ரொம்பவும் தொழில் வளர்ச்சியில் கீழான நிலையில் இருந்து கொண்டிருக்கிறது. நாம் மத்தியிலே இருக்கிறோம்.

SRI T. S. RAMASWAMI : May I know whether this principle has affected the prospects of advancement of textile industry in our State because we have advanced so much in that field.

THE HON. SRI C. SUBRAMANIAM : It cannot be bothways, pressing for removal of regional disparities and at the same time have concentration of more industries in a particular region. We have to take into consideration whether there are possibilities of starting other industries also. If other industries are not possible, perhaps certain regions will have to specialise in certain industries. Taking that into account, we will have to press for the allotment of textiles industries, engineering industries, etc., taking into account the facilities available in our State.

*Per capita Income, etc.*

*2036 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the per capita tax burden (both direct and indirect);
(*b*) the per capita income; and
(*c*) per capita increment (or saving) in the State in 1951, 1956 and 1960?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The per capita tax burden for Madras State on account of the taxes levied by the State Government is as follows :

| Year. | Per capita tax burden. |
|---|---|
| | RS. |
| 1951—52* .. .. .. | 6·64 |
| 1956—57 .. .. .. | 9·29 |
| 1959—60 .. .. .. | 11·45 |
| 1960—61 (Budget Estimate) | 10·61 |

* The figures furnished for the year 1951-52 alone relate to the composite Madras State, because statistics of taxes for the recorganized State for that year are not readily available. These figures exclude the impact of Central taxes.